# திராவிட சமயமே நமது சமயம்



டாக்டர் மு. தெய்வநாயகம் எம்.ஏ.,பிஎச்.டி.



திராவிட சமய ஆய்வு இயக்கம்
278, கொன்னூர் நெடுஞ்சாலை,
அயன்புரம், சென்னை-600 023.

முதற்பதிப்பு 1985 அக்டோபர்

விலை 50 காசு

# உங்கள் நிலை என்ன?

'திராவிட சமய அறிவிப்பு விழா' 29—1—1984 அன்று சென்னை பெரியார் திடலில் நடைபெற்றது. பல்வேறு சமயம் சார்ந்த அறிஞர் பெருமக்களும், பல்கலைக் கழகங்களின் ஆராய்ச்சி அறிஞர்களும் அதில் கலந்து கொண்டு சிறப்பித் தனர். 'திராவிட சமயம்' என்பது பற்றிய அறிமுக விழாவாக அது நடத்தப்பட்டதுடன் 'திராவிட சமயம்' முதல் இதழும் அன்று வெளியிடப்பட்டது.

அதன் பின்னர் திராவிட சமயம்பற்றிக் கருத்தரங்குகள், பொதுக் கூட்டங்கள், வகுப்புகள் பல நடத்தப்பட்டன. திங்கள் இதழ்களுடன், நூல்களும் வெளியிடப்பட்டுள்ளன.

இவைகளின் காரணமாக, ஆராய்ச்சி அறிஞர்கள், சமயப் பெருமக்கள், அரசியல் தலைவர்கள், பொதுமக்கள் ஆகியவர் களிடையே 'திராவிட சமயம்'பற்றிய சிந்தனை பரவி வளர்ந்து வந்துள்ளது.

சிந்தனை, ஆர்வத்தையும் செயல்பாட்டையும் தூண்டி யதன் பயனாக, திராவிட இனத்தில் தோன்றிய சமயங்களைப் பின்பற்றும் அன்பர்கள் பலர் 'எங்கள் சமயம் திராவிட சமயமே' என்பதை உணர்ந்து அறிவிக்க விரும்பியமையால், அவர்களை ஒன்று சேர்க்கும் முயற்சியில், இச் சிறு நூல் வெளிவருகிறது.

1986 மார்ச்சுத் திங்களில் நடைபெற இருக்கும் மாநாட்டில் 'எனது சமயம் திராவிட சமயமே' என ஆயிரக் கணக்கான மக்கள் அறிவிக்கப் போகிறார்கள்.

உங்கள் நிலை என்ன?

மெய்ப்பொருள் அச்சகம், சென்னை-600 023.

# திராவிட சமயம்

யூத இனம் உலகிற்குக் கொடுத்துள்ள சமயக் கருத்துகளின் தொகுப்பு 'யூத சமயம்' எனப் பெயர் பெறுவதைப் போன்று, திராவிட இனம் உலகிற்குக் கொடுத்துள்ள சமயக் கருத்துகளின் தொகுப்பு 'திராவிட சமயம்' என்கிற பெயரைப் பெறுகிறது.

**திராவிட இனம், சமயக் கருத்துகளை உலகிற்குக் கொடுத்துள்ளதா?**

இன்று திராவிட இனம் அடிமைப்பட்டுக் கிடக்கிறது. இந்தியாவிற்குப் பிழைக்க வந்த ஆரிய இனத்தைவிட், இந்தியப் பழங்குடி மக்களின் திராவிட இனம், பிறப்பால் தாழ்ந்தது என நம்பும் அளவுக்குத் தாழ்த்தப்பட்டுக் கிடக்கிறது. ஆகையால், திராவிட இனத்தின் சிறப்புமிக்க சமய வரலாறு மறைந்து கிடக்கிறது. திராவிட இன மக்களுக்கே தங்கள் சமய வரலாறு தெரியவில்லை.

உண்மையில் உலகப் பெரும் சமயங்களையெல்லாம் உருவாக்கிய சிறப்புமிக்க பேரினம், திராவிட இனமே என்பது வரலாற்றுண்மையாகும்.

**எவ்வாறு?**

உலகப் பெரும் சமயங்கள் யாவும் உலகிலுள்ள ஐந்து கண்டங்களுள், ஆசியாக் கண்டத்தில் மட்டுமே தோன்றியுள்ளன. ஆசியாக் கண்டத்திலுள்ள நாடுகளில் இந்தியாவில் வைதிகம், சமணம், பௌத்தம், சைவம், வைணவம் முதலிய

சமயங்களும், இந்தியாவிற்கு வெளியே யூதம், கிறிஸ்தவம், இஸ்லாம் முதலிய சமயங்களும் தோன்றியுள்ளன.

இந்தியாவுக்கு வெளியே தோன்றிய யூதம், கிறிஸ்தவம், இஸ்லாம் ஆகிய மூன்று சமயங்களும் உருவாவதற்குக் காரணராக விவிலியம், குரான் ஆகியவற்றால் குறிப்பிடப் படும் இறையடியாராகிய ஆபிரகாம் அல்லது இப்ராகிம் எனப் படுபவர் விளங்குகிறார்.

இவர் சுமேரியர்களின் 'ஊர்' என்ற நகரிலிருந்து புறப் பட்டுச் சென்றவர் என விவிலியம் கூறுகின்றது. சுமேரியர் களின் முன்னோர், திராவிட இனத்தின் கிளை என்பது, புதை பொருள் ஆய்வுகள் புலப்படுத்தும் வரலாற்று உண்மையாகும்.

ஆகவே, திராவிட இனத்தின் வழிவந்தவரே ஆபிரகாம் என்பதும், திராவிட இனத்திலிருந்து தோன்றிய சமயங்களே இந்தியாவுக்கு வெளியே உருவான உலகப் பெரும் சமயங் களான யூதம், கிறிஸ்தவம், இஸ்லாம் என்பதும் வரலாற்று உண்மையாகும். வரலாற்று ஆசிரியர், இந்தியாவில் வாழும் மக்களைத் திராவிட இனம், ஆரிய இனம் என இரண்டாகப் பிரிக்கின்றனர். இந்தியாவைத் தங்கள் பிறப்பிடமாகக் கொண்ட இனம் திராவிட இனம். சிந்துவெளி நாகரிகம் இவர்களின் சிறப்பை உணர்த்துகிறது.

இந்தியாவிற்குப் பிழைப்புத் தேடி வந்த இனம் ஆரிய இனம்.

ஆரிய இனம் பிழைப்பு நாடி இந்தியாவிற்கு மட்டும் வர வில்லை. இந்தியாவிற்கு வெளியேயும் பல இடங்களுக்குப் பரவிச் சென்றது.

இந்தியாவில் திராவிட இனமும் ஆரிய இனமும் சேர்ந்து வாழுகின்றன. வாழவந்த ஆரிய இனம், இங்குள்ள திராவிட

இனத்தைப் பல்வேறு முறைகளைப் பயன்படுத்தி அடிமைப் படுத்தியுள்ளது.

ஆரியன் என்றால் உயர்ந்தவன் எனவும், திராவிடன் என்றால் தாழ்ந்தவன் எனவும் நம்ப வைக்கப்பட்டுள்ளனர்.

இதன் விளைவாக இந்தியச் சமய வரலாறு தலைகீழ் மாற்றம் பெற்றுள்ளது. இந்தியச் சமயங்கள் யாவும் ஆரியர் களால் உருவாக்கப்பட்டவை எனவும், திராவிடர்கள், சமயம் எதுவுமற்ற காட்டுமிராண்டிகள் எனவும் நம்ப வைக்கப்பட் டுள்ளனர். இந்தியாவிலுள்ள எந்த ஒரு கருத்தையும் எடுத்து, அக்கருத்து ஆரிய இனத்திற்குரியதா, திராவிட இனத்திற் குரியதா என்பதை முடிவு செய்வது எவ்வாறு என்பது எண்ணிப்பார்க்கத் தக்கது.

ஆரியர்கள் இந்தியாவில் மட்டும் வாழவில்லை. இந்தியா விற்கு வெளியேயும் பரவி வாழ்ந்து வருகின்றனர் என்பதைப் பார்த்தோம்.

ஒரு கருத்து இந்திய ஆரியர்களிடம் மட்டும் காணப் படாமல், மற்ற ஆரியர்களிடமும் காணப்படும் பொதுக் கருத்தாக இருக்குமானால், அக்கருத்து ஆரியர்களுக்கே உரிய தாகும்.

அவ்வாறு இல்லாமல், இந்தியாவிற்கு வெளியேயுள்ள ஆரியர்களிடம் காணப்படாமல், இந்தியாவில் திராவிடர் களுடன் கலந்து வாழும் இந்திய ஆரியரிடம் மட்டும் காணப் படும் கருத்து எதுவோ அது இந்தியாவிலுள்ள திராவிடர் களிடமிருந்து ஆரியர்களால் பெற்றுக் கொள்ளப்பட்ட கருத்து என்பது தெளிவாகிறதன்றோ !

இந்த நோக்கில் நாம் பார்க்கும்பொழுது, இந்தியாவுக்கு வெளியேயுள்ள ஆரியர்களிடமிருந்து, உலகப்பெரும் சமயங்கள்

எதுவும் தோன்றாத நிலையில், இந்தியாவில் தோன்றிய சமயங்கள் யாவும் திராவிடர்களுடையவையென்றே முடிவு செய்ய வேண்டியதிருக்கிறது.

இந்திய ஆரியர்களுடைய வேதங்கள் எனப்படும் ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்கிற நான்கும், திராவிடர் களுடைய தொடர்புக்குப் பின்னர் உருவானவை என்பதும், வேத வேள்வியைச் சிறப்பித்துக் கூறும் யஜுர் வேதத்தின் சிறப்புப் பகுதி கிருஷ்ண யஜுர் (கறுப்பர் வேள்வி) என்பதும் எண்ணிப்பார்க்கத்தக்கன. ஆரியர்களின் வேத வேள்வியை எதிர்த்துத் திராவிடப் பெரியவர்களால் உருவாக்கப்பட்ட இந்தியச் சமயங்களே சமணமும் பௌத்தமும் ஆகும்.

அவ்வாறே வேத வேள்விக்கு மாறுபட்ட கோவில் வழி பாட்டையும், வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையுமுடைய சைவம், வைணவம் முதலிய அறுவகைச் சமயங்களும் கி.பி. முதல் நூற்றாண்டிற்குப் பின்னர் தமிழ்நாட்டில் உருவான சமயங்களாகும்.

ஆகவே, உலகப் பெரும் சமயங்களான யூதம், வைதிகம், சமணம், பௌத்தம், கிறிஸ்தவம், சைவம், வைணவம், இஸ்லாம் போன்றவை யாவும் உருவாவதற்குக் காரணமான இனம், திராவிட இனமே என்பதில் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லை.

ஆரியர்களின் வருகைக்கு முன்னர் இந்தியா முழுவதும் பரவி வாழ்ந்து வந்த திராவிட இனம், ஆரியரின் கொடுமை யால், தென்னிந்தியா அளவில் சுருங்கி விட்டது.

திராவிடர்களுக்கேயுரிய சிறப்புக் கடவுள் தென்னிந்தியக் கடவுளானார்.

தென்னாட்டவராகிய திராவிடர்களின் கடவுளே எல்லா நாட்டவராலும் வணங்கப்படும் பொதுக் கடவுளாவார் என்பது திராவிடர்களின் உறுதியான நம்பிக்கை.

இதனை,

'தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி.'

என்னும் அடிகளால் தெளிவாக அறியலாம்.

திராவிடர்களின் சமயமே உலகப் பெருஞ் சமயங்களாக வளர்ந்திருக்கிறது என்பதையே இது உள்ளடக்கி விளக்கிக் காட்டுகிறது.

சிவ வணக்கம் எனப்படும் சிவலிங்க வழிபாடு, திராவிடர்களுக்கேயுரிய சிறப்பு வழிபாடு என்பது, வரலாறு காட்டும் உண்மை. சிந்துவெளிப் புதைபொருள்களில் சிவ லிங்கம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. திராவிடர்களின் சிவலிங்க வணக்கத்தின் விரிவாக விளங்குவனவே யூத, கிறிஸ்தவ இஸ்லாமிய சமயங்கள் என்பதை விவிலியத்தின் பழைய ஏற்பாட்டுப் பகுதிகள் தெளிவாக விளக்கிக் காட்டுகின்றன.

திராவிடர்களின் தென்னாடுடைய சிவனே இன்று உலகம் முழுவதும் பரவியுள்ள, யூத கிறிஸ்தவ இசுலாமிய சமயங் களால் யெகோவா, அல்லா எனப் போற்றப்படுகின்றான்.

எகோவாவாகிய இறைவனுடைய திருக்குமாரனாகிய குமரக் கடவுளே, இயேசு எனவும் குமரன் எனவும் பிள்ளையார் எனவும் பிரமன் எனவும் ஐயப்பன் எனவும் போற்றித் துதிக்கப்படுகின்றார்.

பரிசுத்த ஆவி என்பதும், சக்தி என்பதும், விஷ்ணு என்பதும் வேறு வேறானவை அல்ல. இவை யாவும் தென் னாடுடைய சிவனின் ஒரு பகுதியையே குறிப்பன ஆகும். ஆகவே, தென்னாடுடைய சிவனே ல்லாச் சமயங்களாலும் போற்றப்படும் இறைவன் ஆகிறான். குடி, கொலை, புலாலுணவு இவைகளையே சிறப்பித்து, முழுமுதல் இறைக்

கொள்கையை அறியா நிலையில், இயற்கை வணக்கத்தை அடிப்படையாகக் கொண்ட வேத வேள்வியை மறுத்துக் கொல்லாமை, புலால் மறுத்தல், அஹிம்சை போன்ற சிறந்த கொள்கைகளில், கடவுள் மறுப்புக் கொள்கையை உருவாக்கி, சமண பௌத்த சமயமாக உலகத்திற்குத் தந்த இனமும் திராவிட இனமேயாகும்.

ஆகவே, கடவுள் உண்டு என்றாலும் இல்லை என்றாலும், சிறந்த பண்பாட்டின் அடிப்படையில் உயர்ந்த கொள்கைகளைச் சமயங்களாக உருவாக்கி, உலகுக்குக் கொடுத்த பேரினம் திராவிட இனமேயாகும்.

கடவுள் உண்டு என்று சொல்லி மற்றவர்களை ஏமாற்றி வயிறு வளர்க்கிறவனைவிட, இவ்வாறு மற்றவர்களை ஏமாற்றி வயிறு வளர்க்க இடம் கொடுக்கும் கடவுள், இல்லை எனச் சொல்லும், சிறந்த பண்பாடுடையவர்கள் சிறந்தவர்களே என்பதை உலகுக்குச் சமயமாகக் காட்டியிருக்கும் சிறப்பினமும் திராவிட இனமேயாகும்.

ஆகவே, திராவிட இனம் தோற்றுவித்திருக்கும் யூதம், கிறிஸ்தவம், சைவம், வைணவம், இஸ்லாம் முதலிய கடவுள் கோட்பாட்டுச் சமயங்களும், சமணம், பௌத்தம் போன்ற கடவுள் மறுப்புக் கோட்பாட்டுச் சமயங்களும், உலகம் முழுவதிலும் சிறந்த மனிதனை உருவாக்கிக் காட்ட எழுந்த திராவிட சமயத்தின் கிளைகளாகும். திராவிட சமயத்தின் கிளைச் சமயங்களைச் சேர்ந்த உலக மக்கள், தாங்கள் ஒரே சமயத்தின் பல்வேறு கால வளர்ச்சியில் ஏற்பட்ட பல்வேறு பிரிவுகளைச் சார்ந்தவர்கள் என்பதை அறியாமல், ஒருவர்க்கொருவர் முற்றிலும் வேறுபட்ட கொள்கைகளையுடையவர்கள் எனத் தவறாக உணர்ந்து, ஒருவரையொருவர் பகைத்து வாழுகின்றனர் எனலாம். சமயங்களுக்கிடையேயுள்ள இத்தகைய பகையுணர்வை நீக்கி, யாவரும் ஒரு தாய் மக்கள், திராவிட இனம் உலகுக்குக் கொடுத்த

சமயங்களின் பிள்ளைகள், என்கிற உணர்வினைப் பெற்று யாவரும் அன்பும் ஐக்கியமுமாக வாழ வழி வகுப்பதே 'திராவிட சமயம்' ஆகும்.

திராவிட சமயம்பற்றிய வரலாற்று அறிவை மக்களுக்கு ஏற்படுத்துங்கால் சமய வேற்றுமைகள் நீங்குகின்றன.

உலக வரலாறு எவ்வாறு கி.மு., கி.பி. எனப் பிரிக்கப்பட்டு அறியப்படுகிறதோ அவ்வாறே உலக சமய வரலாறும் கி. மு., கி. பி. எனப் பிரிக்கப்பட்டு அறியப்படும்பொழுது, திராவிட இனத்தில் தோன்றிய சமயங்கள் யாவும், திராவிட சமயம் என்கிற பேராற்றின் பல்வேறு துறைகளே என்பது தெளிவு பெறும்.

உலகிலுள்ள பெரும் சமயங்களுக்கிடையே ஓர் இணைப்பைக் காண முயலுவது மட்டும் இதன் நோக்கம் அன்று. பல சமயங்களாகப் பிரிந்து நிற்கும் இவை யாவும் உண்மையில் ஒரே சமயத்தின் பல கோணங்களே என்னும் வரலாற்று உண்மையை உணர்த்தி உலக மக்கள் யாவரையும் ஒன்றாய் இணைப்பதே திராவிட சமயம் ஆகும்.

எவ்வாறு?

உலகப் பெரும் சமயங்களின் வரலாற்றை நோக்குவோம். கிறிஸ்துவுக்கு முற்பட்ட பெரும் சமயங்கள் - யூதம், வைதிகம், சமணம், பௌத்தம் முதலியன. இவைகளை இரண்டாகப் பிரிக்கலாம்.

1. கடவுள் கோட்பாட்டுச் சமயங்கள் - யூதம், வைதிகம்
2. கடவுள் மறுப்புக் கோட்பாட்டுச் சமயங்கள் - சமணம், பௌத்தம்.

கிறிஸ்துவிற்கு முன்னர் உலகெங்கும், சமயங்கள் உருவாகிய இனத்திலும், உருவாகாத இனத்திலும், மனிதனைக் காட்டிலும் மேலான தெய்வம் அல்லது கடவுள் உண்டு என நம்பிய அத்தனை பேரும், தனித்தனியாகவோ

கூட்டாகவோ, தெய்வத்திற்கு ஆடு, மாடு போன்ற உயிரினங்களைப் பலியிட்டு வந்துள்ளனர். இவ்வாறு பலியிடும் முறையைத் தன்னகத்தே கொண்டுள்ள சமயங்களை, வேள்விக் கோட்பாட்டுச் சமயங்கள் எனக் கூறலாம். யூதமும் வைதிகமும் வேள்விக் கோட்பாட்டுச் சமயங்களாகும்.

கடவுள் என்று ஒன்று இல்லை; ஆகையால் கடவுளின் பெயரால் ஏராளமான உயிர்களைக் கொலை செய்வது பெருந் தவறு, என்கிற கொள்கை அடிப்படையில், வேள்வியில் உயிர்க் கொலை செய்வதை மறுத்து எழுந்தவை, வேள்வி மறுப்புக்கோட்பாட்டுச் சமயங்கள் ஆகும். அவை சமணமும் பௌத்தமும் ஆகும்.

கிறிஸ்துவிற்கு முற்பட்ட வேள்விக் கோட்பாட்டுச் சமயங்களான யூதம், வைதிகம் இவ்விரண்டினுள் கடவுள் ஒருவரே என்னும் உண்மையை உணர்ந்து, உலகுக்கு அறிவித்த பெருமை யூத சமயத்தையே சாரும். வேள்விக் கோட்பாட்டுச் சமயங்கள், உயிர்க்கொலை செய்த போதிலும் கடவுள் நம்பிக்கை மக்கள் மத்தியிலே வளரப் பாடுபட்டன.

சமணமும் பௌத்தமும் கடவுள் இல்லை என்கிற நாத்திக வாதமாகிய கடவுள் மறுப்புக் கோட்பாட்டையுடைய சமயங்களாயினும், உயிர்க் கொலை மறுப்பையும், புலால் மறுத்தலையும், அஹிம்சையையும் மக்கள் மத்தியிலே பரப்பி, அன்பும் அருளும் நிறைந்த, சிறந்த மீமனிதன், உலகில் தோன்றுவதற்காக உழைத்த பெருமை அவைகளையே சாரும்.

கிறிஸ்துவிற்கு முற்பட்ட சமயங்களான யூதம், வைதிகம் பாராட்டும் கடவுள் கோட்பாட்டையும் சமணம், பௌத்தம் பாராட்டும் வேள்வி மறுப்புக் கோட்பாட்டையுமுடைய, அன்பும் அருளும் நிறைந்த மீ மனிதனாக இயேசுகிறிஸ்துவின் வரலாறு அமைந்துள்ளது எனக் கிறிஸ்தவம் உரிமை பாராட்டுகிறது.

கிறிஸ்து பிறப்பதற்கு முன்னர், கடவுளை வணங்கிய எவரும் பலியிடாமல் இருக்க இயலாது.

உயிர்கள் பலியிடப்பட வேண்டிய இடத்தில் இயேசு கிறிஸ்து பலியாகிவிட்டார்; பலி நிறைவேற்றப்பட்டு விட்டது; ஆகையால் இனி கடவுளுக்குப் பலி தேவை யில்லை; என்ற விளக்கத்தில் எழுந்த சமயமே கிறிஸ்தவ மாகும்.

கிறிஸ்தவம், அதற்கு முன்னர் இருந்த வேள்விக் கோட்பாடு, வேள்வி மறுப்புக் கோட்பாடு இரண்டையும் இணைத்து, வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டுச் சமயமாக எழுந்தது.

அதுமட்டுமல்லாது, அது கடவுள் கோட்பாட்டையும் கடவுள் மறுப்புக் கோட்பாட்டையும் ஒன்றாக இணைக்கும் பாலமாகவும் காணப்படுகிறது.

எவ்வாறு?

இயேசுகிறிஸ்துவை, கடவுள் நம்பிக்கையாளர், கடவுளே மனிதனானார் என்னும் விளக்கத்தில் குமரக் கடவுளாக ஏற்றுக்கொள்ளும் நிலையிலும், கடவுள் மறுப்பாளர், அன்பும் அருளும் நிறைந்த சிறந்த மீமனிதராக மட்டும் அவரை ஏற்றுக்கொள்ளும் நிலையிலும், கிறிஸ்தவத்தின் வரலாறு அமைந்து காணப்படுகிறது.

இயேசுகிறிஸ்து, நூற்றுக்கு நூறு பங்கு கடவுள்; அதே நேரத்தில் அவர் நூற்றுக்கு நூறுபங்கு மனிதர் என்னும் வினோத விளக்கம் கிறிஸ்தவர்களால் கொடுக்கப்படுகின்ற காரணத்தால், கடவுளை நம்புகிறவர்களுக்கு அவர் மனிதனாக வந்த கடவுள் எனவும், கடவுளை நம்பாதவர்களுக்கு அவர் ஒரு சிறந்த குரு எனவும் விளக்கங்கள் எழுந்து அது ஆத்தி கத்தையும் நாத்திகத்தையும் இணைப்பதாக உள்ளது.

கிறிஸ்தவத்தின் வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டு அடிப்படையில், கடவுளை வணங்கிக்கொண்டு உயிர்ப்பலி யிடாதிருக்கும் கொள்கையில், கிறிஸ்துவிற்குப் பின் எழுந்த

சமயங்களே சைவம், வைணவம் முதலிய அறுவகைச் சமயங்களும், இஸ்லாமிய சமயமும் ஆகும்.

ஆகவே, உலகப்பெரும் சமயங்களாகிய யூதம், வைதிகம், சமணம், பௌத்தம், கிறிஸ்தவம், சைவம், வைணவம், இஸ்லாம் முதலியன யாவும், தனித்தனியாகப் பார்க்குங்கால் அவை ஒன்றோடொன்று தொடர்பற்ற வேறு வேறு சமயங்களாகக் காணப்பட்ட போதிலும், திராவிட இன அடிப்படையில், திராவிட இன வரலாற்றை நோக்குங்கால், திராவிட இன வரலாற்றில் எழுந்த திராவிட சமயத்தின் பல்வேறு காலக் கட்டத்தில் தோன்றிய கிளைகளாக அவை விளங்குவதை கி.மு., கி.பி. என்கிற சமய வரலாற்றால் நாம் அறிகின்றோம்.

ஆகவே, மேலே கண்ட சமயங்கள் அத்தனையையும் இணைத்த ஒரு பொதுப் பெயரை, வரலாற்று அடிப்படையில் நாம் காண 'வேண்டுமானால், அது 'திராவிட சமயம்' என்றே நாம் கூறியாக வேண்டியதிருக்கிறது அன்றோ !

இப்படி அழைப்பதால், திராவிட இனம் சிறப்படைந்து விடுகிறதே என்றால், வரலாற்றுச் சிறப்பிற்குரிய அப்பேரினத்தின் சிறப்பை ஏற்றுக்கொள்ள ஏன் தயங்கவேண்டும் என்கிற வினா எழுகிறது.

திராவிட இனத்தை அடிமைப்படுத்தி, இழிவாக ஆக்கியவர்களைத் தவிர வேறு எவரும், திராவிட இனத்தின் வரலாற்றுச் சிறப்பை ஏற்றுக் கொள்ளப் பின்னடைய வேண்டியதில்லையன்றோ !

ஆகவே, 'திராவிட சமயம்' என்கிற பெயரைக் கேட்டவுடன், எள்ளி நகையாடுபவர்களும், வெறுப்பவர்களும் யாராக இருத்தல் இயலும்?

திராவிட இனத்தை அடிமைப்படுத்தி ஆளுபவர்களும் அவர்களைச் சார்ந்து வாழுகிறவர்களும் மட்டும் அல்லவா!

திராவிட இன வரலாற்றையும், திராவிட சமய வரலாற்றையும் அறியாதவர்கள், அறிந்துகொள்ள 'முயலு வார்களேயன்றி, எள்ளி நகையாடவோ வெறுக்கவோ மாட்டார்கள்.

ஆகவே, இத்தகைய சிறப்பு மிக்க திராவிட இன வரலாற்றில் தோன்றிய திராவிட சமய வரலாற்றை, முதலில் திராவிடனாகப் பிறந்த ஒவ்வொருவனும் அறிந்து கொள்ள வேண்டும்; மற்றவர்களுக்கும் அறிவிக்க வேண்டும்.

உலக இனங்களில் சிறந்த பேரினம் திராவிட இனம்,

உலக சமயங்களை உருவாக்கிய பேரினம் திராவிட இனம்,

உலக சமயங்களை ஒன்றுபடுத்தும் பேரினம் திராவிட இனம்,

வாழ்க திராவிட இனம்!

வாழ்க திராவிட சமயம்!

என்று உலக மக்கள் யாவரும் சொல்லியாக வேண்டும் அல்லவா !

## சில விளக்கங்கள்

### இந்து சமயமும் திராவிட சமயமும்

'இந்து சமயம்' என்பது இந்தியர்களின் சமயம் என்பதன் சுருக்கமாகும். ஆரியர் வருகைக்கு முன்னர், இந்தியா முழு வதும் பரவி வாழ்ந்தவர்கள் திராவிடர்கள் என்பது வரலாறு.

ஆகவே, 'இந்தியர்கள்' என்பது திராவிடர்களுக்கு மட்டுமே உரிய பழம் பெயராகக் கொள்ள வேண்டியதிருக்கிறது. 'இந்து

சமயம்' என்பது, உண்மையில் திராவிட சமயத்தை மட்டுமே குறிக்க இயலும்.

ஆனால், கி. பி. 16-ஆம் நூற்றாண்டிற்குப்பின், அதற்கு முன் பல்வேறு நாடுகளாக இருந்த இந்தியாவை நமது தமிழகம் உட்பட ஒன்றாக இணைத்தவர்களும் அதற்கு இந்தியா என்கிற பெயர் வைத்தவர்களும், இந்தியா விலுள்ளவர்களின் சமயம் என்கிற பொருளில் 'இந்து சமயம்' என்கிற பெயரை உருவாக்கியவர்களும் ஐரோப்பியர்களே என்பது வரலாறு கூறும் உண்மையாகும்.

இந்தியா என்கிற இட எல்லையின் அடிப்படையில் 'இந்து சமயம்' என்கிற தொடர் உருவாக்கப்பட்ட போதிலும், இந்தியா வில் தோன்றிய சமணம், பௌத்தம், சீக்கியம் போன்ற சமயங்களை அது தன்னுள் அடக்கவில்லை. இலங்கையிலும் ஜப்பானிலும் சீனாவிலும் வாழும் பௌத்தர்களுக்கு அவர்கள் சமயம் இந்தியாவில் தோன்றிய போதிலும், அவர்களுக்கு இந்துக்கள் என்கிற பெயர் இல்லை.

இந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் பஞ்சாபில் நடை பெறும் சண்டையை நாம் அறிவோம்.

சீக்கியர்கள் இந்துக்கள் அல்லர் என்பதன் விளக்கம் என்ன? அப்படியானால் 'இந்து' என்பது யாரைக் குறிக்கிறது?

ஆரியர்களின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டு, பிறப்பால் தாங்கள் ஆரியர்களுக்கு அடிமைகள் என்பதை ஒப்புக்கொண்டுள்ளவர்களை மட்டுமே, இன்று இந்தியாவில் 'இந்துக்கள்' என்கிற பெயர் குறிக்கிறது.

ஆரியர்களின் ஆதிக்கத்தை எதிர்க்கும் இந்தியச் சமயங்கள், இந்து சமயத்தைச் சார்ந்தவையாகக் கருதப்பட வில்லை.

ஆகவே, ஆரியர்களின் வருகைக்கு முன்னர், இந்தியா முழுவதும் பரவி வாழ்ந்த திராவிடர்களின் சமயம், இன்றைய இட எல்லையின் அடிப்படையில் 'இந்து சமயம்' என்கிற பெயரைப் பெறுவது நியாயமாயினும், இந்து சமயம் என்பது 'ஆரிய அடிமைகளின் சமயம்' என்கிற பொருள் அளவுக்குக் குறுகிவிட்ட காரணத்தால், ஆரியர்களால் பாராட்டப்படும் இன்றைய 'இந்து சமயம்' திராவிடர்களின் சமயம் அன்று என்பது தெளிவு.

ஆரியர்களையும் ஆரிய அடிமைகளையும் மட்டுமே அது பிரித்துக் காட்டும் பெயராக விளங்குகிறது.

திராவிட இனத்தில் எழுந்த எந்தச் சமயப் பிரிவும், ஆரியர்களுக்கு அடிமை என்கிற பொருளில் வழங்கப்படும் இன்றைய இந்து சமயத்தைச் சார்ந்தது அன்று.

திராவிடர்களின் தென்னாடுடைய சிவனைப் போற்றும் சைவம் முதலிய அறுவகைச் சமயங்களும் திராவிட சமயத்தின் கிளைகளேயல்லாமல் இன்று அடிமைப்பட்டுக்கிடக்கும் இந்து சமயத்தின் கிளைகள் அல்ல. அவைகளை, அடிமைப் படுத்தப்பட்டுள்ள இந்து சமயத்தின்கிளைகள் என்பது ஏமாற்றி அடிமைப்படுத்தும் முயற்சி ஆகும். உண்மையில் 'இந்துசமயம்' என்பது இந்தியா முழுவதும் வாழ்ந்த திராவிடர்களின் சமயமேயாகும். ஆனால், சமயமற்ற நாடோடிகளாகிய ஆரியரின் சூழ்ச்சிக்கு, 'இந்து சமயம்' என்கிற தொடர் இன்று அடிமைப்பட்டுவிட்ட காரணத்தால், 'இந்து சமயம்' என்கிற பெயரிலிருந்து ஒவ்வொரு தன்மான முள்ள இந்தியனும் விடுதலை பெற்றேயாக வேண்டியதிருக் கிறது.

இந்தியாவில் தோன்றிய சைவம், வைணவம் போன்ற ஒவ்வொரு சமயமும், 'இந்து' என்கிற பெயரை நீக்கி, அந்தந்தச் சமயத்தின் பெயரால் அழைக்கப்பட முயலலாம்,

ஆயினும், 'இந்து சமயம்' என்கிற இணைப்பு, சைவ வைணவப் பகையை மறந்து, ஒன்றாக இறைவனை வணங்கு வதற்குப் பயன்பட்டதைப் போன்று, வரலாற்று அடிப் படையில் தென்னாடுடைய சிவ வணக்கத்தை அடிப்படை யாகக் கொண்டு, உலகப் பெரும் சமயங்களை இணைத்து, ஒருமைப்பாட்டை உணரும் நோக்கில் 'திராவிட சமயம்' என்ற பெயரே நமக்கு விடுதலை தருவதும் உயர்வு தருவதும் ஊக்கம் தருவதும் உண்மையைச் சொல்லுவதுமாக அமைந்துள்ளது.

'தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி'

என்னும், விடுதலை முழக்கத்தை, வீர முழக்கத்தை, வரலாற்று உண்மையை உணர்த்தும் முழக்கத்தை, திராவிட இனத்தின் அடிப்படையில் எழுந்த சமயங்கள் அத்தனையும் ஒன்றாக இணைந்து எழுப்புங்காலம் அதிகத் தூரத்தில் இல்லை.

அந்நியர்களுக்கு அடிமைப்படுத்தும் போலி இந்து சமயம் மறைந்து, உண்மையான இந்தியச் சமயமான திராவிட சமயம் உலகெங்கும் ஓங்க ஒன்றுபடுவோம் வாரீர்! வாரீர்! என அழைக்கின்றோம்.

**திராவிட சமயத்தில் சேர்ந்தால், அவரவருடைய தனி வழிபாட்டை விட்டுவிட வேண்டுமா?**

திராவிட சமயம் என்பது ஒரு புதிய சமயம் அன்று. அதில் யாரும் புதிதாகச் சேர்த்துக் கொள்ளப்படுவதில்லை. இதற்கெனத் தனியான சடங்கோ சம்பிரதாயமோ இல்லை.

எவ்வாறு இந்துவாக ஒருவன் பிறக்கிறான் எனச் சொல்லப்படுகிறதோ, அவ்வாறே திராவிட சமயத்தானாக ஒருவன் பிறக்கிறான்.

யூதம், வைதிகம், சமணம், பௌத்தம், கிறிஸ்தவம், சைவம், வைணவம், இஸ்லாம் ஆகிய சமயங்களின் வழி உலகம் முழுவதும் பரவி இருப்பது திராவிட சமயம் ஒன்றே. ஆகவே, உலகில் எந்தக் குழந்தை எங்குப் பிறந்தாலும், அது திராவிட சமயத்தைச் சார்ந்ததாகவே பிறக்கிறது.

திராவிட இனம் தனக்குக் கொடுத்த சமயத்தைத் தான் பின்பற்றுகிறதை அக்குழந்தை உணரும் பொழுது, அது தான் திராவிட சமயத்தைச் சார்ந்தது என்பதைக் கண்டு கொள்ளுகிறது,

அதுவரை அது, தன் சமயத்தை வேறு பெயரிட்டு அறிந்து வருகிறது.

உதாரணத்திற்கு, அமெரிக்கக் குழந்தையொன்று, கிறிஸ்தவ சமயமே தனது சமயம் என நினைக்கிறது. கிறிஸ்தவம் திராவிட சமயத்தின் ஒரு கிளை என்பதை அது அறியும் பொழுது, திராவிட சமயத்தை அறியும் அளவுக்கு வளர்ச்சியடைகிறது.

தன்னுடைய சமயம் திராவிட சமயமே என அறிவிப்பதற்கு அதற்கு உரிமை கிடைக்கிறது. வரலாற்று அறிவின் வழியில், அக்குழந்தை தனது சமயம் திராவிட சமயம் என அறிவிப்பதை யாரும் தடுத்து நிறுத்த இயலாது.

அதே சமயம், அது கிறிஸ்தவ வழிபாட்டை விட்டுவிட்டு, வேறு வழிபாட்டைக் கைக்கொண்டேயாக வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை.

எவ்வாறு திருநீறு பூசும் சைவரும், திருமண் இடும் வைணவரும், கடவுளே இல்லை எனக் கூறும் நாத்திகரும் இந்து சமயத்தைச் சார்ந்தவரே எனக் கூறப்படுகிறதோ, அவ்வாறே வணக்க முறையில் வேறுப்பட்டிருக்கும், யூதம்

முதலிய சமயங்களைச் சார்ந்தவர்களும் திராவிட சமயத்தைச் சார்ந்தவர்களேயாவர்.

தான் திராவிட சமயத்தைச் சார்ந்தவன் என்பதை உணரும் ஒருவனுக்கு, எதிர்ச்சமயமோ எதிர்க் கடவுளோ இல்லை என்கிற மேலான ஆன்மீக உணர்வு பொங்கிப் பெருகுகிறது. அத்துடன் எல்லாச் சமயங்களும் தனது சமயங்களே என்பதும், பல்வேறு சமயங்களில் கடவுளுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பெயர்கள் யாவும், ஒரே கடவுளை விளக்க எழுந்த விளக்கங்களே என்பதும், கடவுளின் பெயரால் ஏமாற்றுகளும் சூழ்ச்சிகளும் பெருகியபோது, இப்படிப் பட்டவைகளுக்கு இடம்கொடுக்கும் கடவுள், இல்லை எனக் கூறும் சிறந்த சமுதாயத் தொண்டர்களைக் கடவுளே எழுப்பி, நாத்திகவாதத்தை நிறுவி, ஆத்திகத்தைச் சரிப்படுத்து கின்றார் என்கிற சிறந்த வரலாற்று ஞானமும் திராவிட சமயத் தானுக்கு மட்டும் கிடைக்கக்கூடிய சமய வரலாற்று அறிவு ஆகும்.

ஆகவே, திராவிட சமயத்தை உணர்ந்தவன், தன் வழிபாட்டைச் சிறப்பாகச் செய்வதுடன், மற்றவர் வழி பாட்டையும் மதிக்க அறிகிறான். மற்றச் சமயங்களின் உயர்ந்த கொள்கைகள் யாவற்றையும் தனது கொள்கை யாகவே ஏற்கின்றான்.

அவனிடத்தில் வேறு எவரும் சமயக் கலவரத்தையோ சமய வெறியையோ தூண்ட இயலாது. ஏனென்றால், எல்லாச் சமயங்களும் அவனுடையவைகளே.

சமயத்தின் பெயரால் அவனை எவரும் அடிமைப் படுத்தவோ, ஏமாற்றவோ இயலாது. ஏனெனில், அவன் ஆத்திக நாத்திக சமயங்களின் வரலாற்றை அறிந்தவன். உண்மையான கடவுளை உணர்ந்தவன். சமுதாயத்திற்குச் செய்யும் தொண்டே கடவுள் தொண்டு என்பதைச் சமய

வரலாற்றின் வழியில் புரிந்து கொண்டவன். இடைத்தரகர் களின் ஏத்துக்கு அகப்படாதவன்.

சமுதாய நன்மைக்கெனப் பாடுபடும் உண்மையான இறையடியார்களை மதிக்கத் தெரிந்தவன். அவனே கடவுளின் பிள்ளை. உலக மக்கள் யாவரும் அவனுடைய சகோதரர்களேயல்லரா?

ஆகவே, அவன் கண்களுக்கு, அவன் சைவனானால் உலகிலுள்ள கோயில்களெல்லாம் சைவக் கோயில்களாகவும், அவன் கிறிஸ்தவனானால் உலகிலுள்ள கோயில்களெல்லாம் கிறிஸ்தவக் கோயில்களாகவுமே காட்சியளிக்கின்ற காரணத் தால், சமயக் காழ்ப்பிற்கு எள்ளளவும் இடம் இல்லாமல் போகிறது.

ஆகவே, தன் வழிபாட்டு முறைகளுடன் மற்ற வழிபாடு களையும் புரிந்து கொள்ள முயற்சி எடுப்பவனாகின்றான். மற்றச் சமயங்களையும் நன்கு அறியப் பாடுபடுகிறவனா கின்றான். அவன் கண்களுக்குக் கடவுள், சமுதாய நன்மை யின் முழுவடிவாகவும், மனிதர் யாவரும் உடன்பிறந்த சகோ தரர்களாகவும் காட்சி தருகின்றனர்.

**சாதிப்பிரிவுகள்பற்றித் திராவிட சமயத்தின் நிலை என்ன?**

பிறப்பால் மக்கள் யாவரும் சமம் எனக் கூறுவது திராவிட சமயம்.

அதே நேரத்தில் ஆணவம் தலைக்கு ஏறி, தானே உயர் சாதி என உரிமை பாராட்டி, மற்றவர்களை இழிவு படுத்து பவன், மனிதத் தன்மையிலிருந்து தாழ்ந்துவிட்ட காரணத் தால், உண்மையில் அவனே தாழ்ந்த சாதியாகக் கருதப்படு பவன் என்பதும், எவ்வித ஆணவத்திற்கும் இடம் இல்லாமல் தன்னைத் தாழ்த்தி, சமுதாய நன்மைகளைச் செய்பவர்களே

உண்மையில் உயர்ந்த சாதியார் என்பதும் உலகப் பெரியோர்கள் கண்டுரைத்த உண்மை. அவ்வுண்மையே திராவிட சமயக் கொள்கையாகும்.

இந்தியாவில் காலங்காலமாகச் சாதியின் பெயரால் பின்தள்ளப்பட்டும் ஒடுக்கப்பட்டும் வாழும் மக்கள் முன்னேறு வதற்காக, அரசு கொடுக்கக் கடமைப்பட்டுள்ள நன்மைகளை அரசிடமிருந்து பெற்றுக் கொள்ளுவதற்கும் அவர்களுடைய உரிமை எவ்விதத்திலும் பாதிக்கப்படாமல் காப்பாற்றப் படுவதற்கும் திராவிட சமயத்தை உணர்ந்த அன்பர்கள் பாடுபடுவார்கள்.

**திராவிட இனத்தைச் சேராத ஒருவர் திராவிட சமயத்தில் சேர இயலுமா?**

திராவிட சமயம் புதிய சமயம் அன்று. அதற்கென்று எவ்விதச் சடங்கோ சம்பிரதாயமோ இல்லை. திராவிட இனத்தில் பிறந்தவர்கள் திராவிடர்கள். திராவிட 'சமயத்தில் பிறந்தவர்கள் திராவிட சமயத்தார். யூதம் முதலிய உலகப் பெரும் சமயங்கள் யாவும் திராவிட சமயங்கள். அந்தந்தச் சமயங்களில் பிறந்த அத்தனை பேரும் திராவிட சமயத்தைச் சார்ந்தவர்களே. இந்த உண்மையை அறிந்து கொள்ளுகிற வர்கள், தாங்கள் திராவிட இனத்தில் பிறக்காதிருந்த போதிலும், திராவிட இனம் தங்களுக்குக் கொடுத்துள்ள சமயமாகிய திராவிட சமயத்தைத் தாங்கள் சேர்ந்தவர்கள் என்பதை நன்றியுடன் உணர்ந்து கொள்ளுகிறார்கள். ஆகவே, இனம் வேறு, சமயம் வேறு என்பது தெளிவு. பிறங் பால் இனங்களுக்கிடையே ஏற்றத்தாழ்வு இல்லை எனக் கூறுவது திராவிட சமயம்.

'திராவிட சமயமே நமது சமயம்' என்பதை அறிந்து உணர்ந்து கொண்டவர்கள், **அடுத்துச் செய்ய வேண்டியது என்ன?**

'தாம் இன்புறுவது உலகு இன்புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்'

என்னும் வள்ளுவர் வாக்கிற்கிணங்க, பெற்ற இன்பத்தைப் பிறருடன் பகிர்ந்து கொள்ளவேண்டும் அன்றோ! தாம் திராவிட சமயத்தைச் சார்ந்தவர் என்பதை உணர்ந்து கொண்ட ஒருவருக்கு, உண்மையை உணர்ந்து கொண்டதுடன், உலகுக்கும் அவ்வுண்மையை உணர்த்த வேண்டிய கடமை வந்து விடுகிறது. அவர் கடமையை அவர் செய்ய வேண்டும்.

**தனியாள் செயல்படுவது எவ்வாறு?**

உண்மையை உணர்ந்து கொண்டவர்கள் தனித்தனியாக, மற்றவர்களின் தொடர்பின்றிச் செயல்படுவது கடினமே. அதை எளிதாக்கும் பொருட்டு, ஒரு கூட்டு ஐக்கியமாகச் செயல் படலாம். கருத்துகளை மேலும் நன்றாகப் புரிந்து கொண்டு, திறமையாகச் செயல்பட அது துணை புரியும்.

திராவிட சமயத்தின் பல்வேறு கிளைகளைப் பற்றிய தெளிவான, ஆராய்ச்சியுடன் கூடிய அறிவு, திறமையான செயல்பாட்டிற்கு வழிவகுக்கும்.

ஆகவே, 'நமது சமயம் திராவிட சமயமே' என்னும் உண்மையை உணர்ந்து கொண்டவர்கள், முதலில் 'எனது சமயம் திராவிட சமயமே' என உலகுக்கு அறிவிக்க முன்வர வேண்டும். அதன் பின்னர் இவ்வாறு உணர்ந்து அறிவிக்க முன்வந்திருக்கும் திராவிட சமய அன்பர்களுடன் கூடி, உலகம் முழுவதும் இவ்வின்பத்திற்குள் வந்து இன்புற, ஒவ்வொருவரும் ஆற்ற வேண்டிய கடமைகளைப் பகிர்ந்து செயல்படுத்த வேண்டும். இந்தக் கடமைகளைச் செயல் படுத்தவே 'திராவிட சமய ஆய்வு இயக்கம்' அமைக்கப் பட்டிருக்கிறது.

ஆகவே, முதலில் நீங்கள் அறிவிக்க வேண்டும். பின்பு நீங்கள் இணைந்து செயல்பட வேண்டும். அறிவிக்க விரும்பும் அன்பர்கள் 'எனது சமயம் திராவிட சமயமே' என்கிற தலைப்பில் எதிர்பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளவை களைத் தனித்தாள் ஒன்றில் எழுதி, விபரங்களை நிரப்பி அனுப்புவீர்களானால், உங்கள் விருப்பம் தொடர்ந்து செயல் வடிவங்களாக மலரும்.

இவ்வாறு செயல்பாடுகள் நடைபெறும் பொழுது, திராவிட சமயத்தின் கிளைகளான உலகப் பெரும் சமயங்கள் எதிர் பார்க்கும் உலகமக்கள் யாவரும் அன்போடும் ஐக்கியத்தோடும் இன்புற்று வாழும் இறையரசு மலருவதற்கு வழி ஏற்படும் அன்றோ!

**குறிப்பு :**

இது பொது மக்களுக்காக எழுதப்பட்டுள்ளமையால், ஒவ்வொன்றுக்கும் வரலாற்றுச் சான்றுகள் இங்கே கொடுக்கப் படவில்லை. வரலாற்றுச் சான்றுகளுடன் திராவிட சமயத்தை அறிந்து கொள்ள விரும்பும் அன்பர்கள், அதற்கான ஆராய்ச்சி நூல்களை எங்களிடம் வாங்கிப் படிக்கலாம். திங்கள் தோறும் வெளிவரும் 'திராவிட சமயம்' என்கிற இதழையும் வாங்கி வாசிக்கலாம். நாங்கள் உங்களிடத் திற்கு வந்து கற்றுக் கொடுக்க வேண்டும் என நீங்கள் விரும்பினால், பத்துப்பேருக்குக் குறையாமல் ஒன்று சேரு வதற்கு வாய்ப்பு ஏற்படுத்துங்கள். நாங்கள் வந்து வகுப்பு களை நடத்த ஆயத்தமாய் இருக்கின்றோம்.

இதிலுள்ள கருத்துகளை மறுக்க நினைக்கும் அன்பர்கள் ஆய்வு அடிப்படையில் கட்டுரையாக எழுதி எங்களுக்கு அனுப்பினால் அதை அப்படியே, 'திராவிட சமயம்' என்னும் நமது திங்கள் இதழில் வெளியிட்டு, அவைகளுக்குப் பதிலும் கொடுக்க ஆயத்தமாய் இருக்கின்றோம்.

வாழ்க திராவிட சமயம்!

# எனது சமயம் திராவிட சமயம்

தலைவர்,

திராவிட சமய ஆய்வு இயக்கம்
278, கொன்னூர் நெடுஞ்சாலை,
அயன்புரம், சென்னை-600 023.

ஐயா,

உலகப் பெரும் சமயங்களை உருவாக்கிய திராவிட இன வரலாற்றில் தோன்றிய சமயமே நான் பின்பற்றி வரும் கொள்கை அல்லது சமயம் என்னும் உண்மையை உணர்ந்து கொ ண்டேன்.

ஆகையால், இனி என்னுடைய கொள்கை அல்லது சமயம் 'திராவிட சமயம்' என்று மட்டுமே அறியப்பட விரும்பு கின்றேன்.

தாங்கள் தயவுசெய்து அதற்கு ஆவன செய்ய வேண்டுகின்றேன்.

நன்றி. தங்கள் அன்புள்ள,

(கையொப்பம்)

பெயர் :—

தந்தை / கணவர் :—

பிறந்த நாள் :—

கல்வித் தகுதி :—

பணி முகவரி :—

வீட்டு முகவரி :—

(இதைக் கிழித்து அனுப்ப வேண்டாம். தனித்தாள் ஒன்றில் எழுதி, நிரப்பி அனுப்புக).

# திராவிட சமய ஆய்வு இயக்கம்-நோக்கம்

1. இறைவனையுணர்ந்து வெளிப்படுத்தி உலகம் முழுவதும் ஆன்மீக அமைதியைப் பரப்பிய திராவிட இனக் கிளைகளை ஆராய்ந்து அவற்றினிடையே ஒருமைப்பாட்டை வளர்த்தல்.

2. திராவிட இனத்தில் தோன்றிய சமயங்களான யூதம், வைதீகம், சமணம், பௌத்தம், கிறிஸ்தவம், சைவம், வைணவம், இஸ்லாம் போன்றவைகளின் இடையேயுள்ள ஒருமைப்பாட்டை ஆராய்தல்—சமய ஒற்றுமையை வளர்த்தல் — ஒரே திராவிட சமயத்தை அறிதல்—அறிவித்தல்

3. பிளவுண்டு கிடக்கும் சமயங்கள், ஆதிக்கவாதிகளிடமிருந்து விடுதலை பெற்றுப் பொதுமக்களுக்குப் பயன்படும் கூறுகளை ஆராய்தல்—செயல்படுத்தல்.

4. திராவிட சமய வெளிப்பாட்டுக்கிணங்க உலக அரசுகள் யாவும் நேசத்துடன் இணைந்து போற்றும் இறையரசு [Kingdom of God - இராம இராஜ்யம், Second Coming – கல்கியவதாரம்] பற்றி ஆராய்தல்—இராணுவம் அற்ற உலகப் பேரரசு உருவாக உலக மக்களை ஆயத்தப்படுத்துதல்.